30th March 1961]

**Sri K. ANBAZHAGAN** : தலைவர் அவர்களே, சாதாரணமான சிறிய கார் ஓட்டுகிறவர்களை, விசை வண்டி ஓட்டுகிறவர்களை முதலில் அந்த வேலையில் எடுத்துக் கொண்டு, அதற்குப் பின்னால் பயிற்சி அளித்து பெரிய பஸ்களை ஓட்டுவதற்கு அவர்களை அமர்த்திக் கொள்ளக்கூடாதா ? அப்படிப்பட்ட முறையில் செய்வதற்கு கனம் அமைச்சர் அவர்கள் முயற்சிப்பார்களா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : கனம் அங்கத்தினர் சொல்லுகிற யோசனை இப்பொழுது இருக்கிற விதிகளுக்கு முரணானது. பெரிய வண்டிகள் ஓட்டவேண்டுமென்று சொன்னால் "ஹெவி என்டார்ஸ்மெண்ட்" இருக்க வேண்டும். மேலும் 3 வருஷம் " எக்ஸ்பீரியன்ஸ் " இருக்க வேண்டும். இல்லாவிட்டால், விபத்துக்கள் ஏற்பட்டுவிடும் என்று அஞ்ச வேண்டியிருககிறது.

**Sri A. GOVINDASAMI** : ஓய்வுபெற்ற டிரைவர்களை வேலைக்கு அமர்த்தும்பொழுது, அவர்கள் ஓய்வுபெற்ற காலத்தில் வாங்கிய சம்பளம் அவர்களுக்கு கொடுக்கப்படுமா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : அவர்களுக்கு " டெய்லி பேஸிஸில் "சம்பளம் கொடுக்கப்படுகிறது. ஓய்வு பெற்றவர்களின் கணக்கு எல்லாம் தீர்த்துவிடப்படும். ஆனால் அவர்களுக்கு டெம்பரரியாக " டெய்லி பேஸிஸில் " என்ன உண்டோ அதன்படி கொடுக்கப்படும்.

*Cooum and Buckingham Canal (navigation)*

* 1204 *Q.*—Sri K. SATTANATHA KARAYALAR: }
Sri T. S. RAMASWAMY : } Will the Hon. the Minister for Works be pleased to state—

(*a*) whether there is any proposal to make the river Cooum and the Buckingham Canal navigable within the city limits; and

(*b*) if so, the details thereof?

The Hon. Sri P. KAKKAN : (*a*) Yes, Sir.

(*b*) The Government appointed a High Power Technical Committee to draw up a comprehensive scheme for the development of the Cooum and the Buckingham Canal within city limits and making them navigable. The report of the Committee has been received recently. The Committee has worked out a detailed scheme costing Rs. 120 lakhs. It is being examined by the Government.

**Sri K. SATTANATHA KARAYALAR** : இந்தத் திட்டத்தின்படி. ஸிட்டிக்குள்ளே இருக்கக்கூடிய பகுதி முழுவதும் இந்த கெனல் செப்பனிடப்படும் என்று சொல்லப்படுகிறது. வடக்கே உள்ள புலிக்கட்டு என்ற மீன்பிடித்துறைமுகத்தையும் சேர்த்து இதோடு இணைத்தால் செம்மையாக இருக்கும் என்று சொல்லப்படுகிறது. அதற்கு என்று தனியாக செலவு செய்து அதோடு இணைக்கப்படுமா ? அல்லது இந்தத் திட்டம் அதையும் இதோடு சேர்த்து இணைக்கக்கூடிய திட்டமா ?

**The Hon. Sri P. KAKKAN** : ஸிட்டியை பொறுத்தவரையில் தான் ரூ. 120 லட்சத்திற்கு திட்டம். இதர பக்கிங்ஹாம் கெனல், வேதாரண்யம் கெனல் ஆகியவைகளைச் செப்பனிடுவதற்காக வேறு 80 லட்சம் ரூபாயில் ஒரு திட்டத்தை அரசாங்கம் பரிசீலனை செய்து மத்திய சர்க்காருக்கு அனுப்பி வைத்திருக்கிறார்கள். அவர்களும் ஓரளவு கொடுத்திருக்கிறார்கள்,

[30th March 1961

SRI K. VINAYAKAM : இந்த பக்கிங்ஹாம் கெனல் சீரமைப்பு செய்வதற்கு 120 லட்சம் ரூபாய் வேண்டியதாக இருப்பதால், இதற்காக ஏதாவது மத்திய சர்க்காரிடமிருந்து மான்யமாகவோ அல்லது கடனாகவோ கோர நமது அரசாங்கம் எடுத்துக் கொண்ட முயற்சி என்ன? இதை எப்பொழுது அமுல்படுத்த முடியும். இதைச் சீரமைப்பு செய்வதற்கு ஏதாவது ஒரு "டார்ஜெட் டேட்" கடைசி தேதி என்று அமைத்திருக்கிறார்களா ?

THE HON. SRI P. KAKKAN : நகரத்திற்குள்ளே செய்யப்படுகிற வேலைக்கு மத்திய சர்க்காரிடமிருந்து எந்தவிதமான கோரிக்கையும் கேட்கவில்லை. பக்கிங்ஹாம் கெனல் இதரப் பகுதிகளை செப்பனிடுவதற்கு மத்திய அரசாங்கத்தை கேட்டிருக்கிறோம்.

SRI K. ANBAZHAGAN : இந்த பக்கிங்ஹாம் கால்வாயும் கூவம் ஆறும் நல்ல முறையில் விரிவுபடுத்தப்பட்டு, ஆழப்படுத்தப்பட்டு அமைக்கப்பட்டால்தான் சுகாதார வசதியும் அதுபோல போக்குவரத்து வசதியும் பொதுமக்களுக்குக் கிடைக்கும் என்ற காரணத்தினால் இந்த ஆண்டிலேயே இந்த வேலை துவக்கப்படுமா ? அதற்கு ஏதேனும் உடனடியான திட்டத்தை கனம் அமைச்சர் அவர்கள் கருதிக் கொண்டிருக்கிறார்களா?

THE HON. SRI P. KAKKAN : "ஹைபவர் டெக்னிகல் கமிட்டி" ரிபோர்ட்டு சமர்பித்திருக்கிறார்கள். அந்த ரிபோர்ட்டு பரிசிலனை செய்யப்பட்டு ஒரு முடிவு எடுக்கப்படும்.

SRI A. VEDARATHNAM : "வாட்டர்வேஸ் ஹைபவர்" கமிட்டியினுடைய சிபார்சுகள் மத்திய அரசாங்கத்திலோ, நம்முடைய அரசாங்கத்திலோ அங்கீகரிக்கப்பட்டுவிட்டதா ? அப்படியானால் அது எப்பொழுது முதல் அமுலுக்கு வரும் ?

THE HON. SRI P. KAKKAN : மத்திய அரசாங்கத்தினர் இரண்டு திட்டங்களை அங்கீகரித்து இப்பொழுது நமக்கு சாதகமாகக் கொடுத்திருக்கிறார்கள்.

(1) Terminal facilities on Buckingham Canal at Madras.

(2) Improvements to Buckingham Canal and its tow path.

இந்தத் திட்டங்கள்தான் அங்கீகாரம் பெற்றவை.

*Dam across Chinnar river*

* 1205 *Q.*—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Works be pleased to state whether the proposal to construct a dam across Chinnar river near Panchapalli in Dharmapuri taluk, Salem district, is included in the Third Plan?

THE HON. SRI P. KAKKAN : The list of schemes to be taken up under Third Five-Year Plan has not been finalized yet.

*National Council of Applied Economic Research (Report)*

* 1206 *Q.*—SRI T. S. RAMASWAMY : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) with reference to Question No. 146 answered on 12th August 1960 whether the National Council of Applied Economic Research have submitted their report and, if so, the salient features of the report; and

(*b*) the expenditure incurred by the Government on this enquiry by the Research Council?